**Sri K. PERIANNAN :** கனம் சபாநாயகர் அவர்களே, பெரம்பலூர் தாலுக்கா மிகவும் பிற்பட்ட காடாரம்பப் பிரதேசமாக இருந்தும் இந்த நெருப்பு அணைக்கும் படை நிலையம் திருச்சி தலைநகரத்திலிருப்பதால் இங்கே தீப்பிடித்த சமாச்சாரம் தெரிந்த உடனேயே அவர்கள் கிளம்பினு லும் இருபது மைல், முப்பது மைல் வருவதற்குள் இங்கே கிராமங்கள் எல்லாம் எரிந்து சாம்பலாகிப் போய்விடுகின்றன என்கிற விஷயம் அரசாங் கத்திற்குத் தெரியவருமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இதையெல்லாம் கவனித்தே திருச்சி ஜில்லா கலெக்டர் பெரம்பலூரில் பயர் ஸ்டேஷன் வைக்க வேண்டுமென்று கோரியிருக்கிறார்.

**Sri S. LAZAR :** பெரம்பலூர், அரியலூர் இங்கே பயர் ஸ்டேஷன் வைக்கவேண்டுமென்ற கோரிக்கை நிதி நிலைமையை அனுசரித்து பரிசீ லிக்கப்படுவதாக கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஸ்ரீரங்கத்தில் பயர் ஸ்டேஷன் ஏற்படுத்தப்போவதாகத் தெரிகிறது. திருச்சிக்கு அருகில் இரண்டு மைலில் ஸ்ரீரங்கம் இருப்பதால் அங்கே ஏற்படுத்தப் போவதை பெரம்பலூரில் ஏற்படுத்துவதற்கு சர்க்கார் யோசிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** என்னிடத்திலுள்ள தகவ லில் இருந்து ஸ்ரீரங்கத்தில் ஏற்படுத்தப் போகிறார்களா, இல்லையா என்று தெரியவில்லை, பொதுவாக ஓரிடத்தில் இருப்பதை இன்னொரு இடத்திற்கு மாற்றும்படியாகச் சொல்லவேண்டாம். இந்த இடத்தில் வேண்டு மென்றால் அது தனியாகவே பரிசீலித்து ஏற்படுத்தப்படும்.

**Sri A. GOVINDASAMY :** நான் கேட்ட கேள்விக்கு அவ்வப்போது கவனித்து நடவடிக்கை எடுக்கப்படும் என்று மந்திரி அவர்கள் சொன் னார்கள். நான் கேட்ட கேள்வி இறந்தவர்களுடைய குடும்பத்திற்கு நஷ்ட ஈடு கொடுக்கப்படுகிறதா என்பது தான் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இது எல்லாம் அவ்வப்போது கலெக்டர்களால் கவனிக்கப்பட்டு நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறதென்று மீண்டும் சொல்கிறேன்.

### *Edward Textile Mills*

* 465 *Q*.—Sri S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the steps taken by the Government to reopen the Edward Textile Mills, Madras; and

(*b*) the number of persons thrown out of employment due to the closure of the mills?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) & (*b*) The management of Edward Textile Mills notified in November 1957 that the mills would be closed with effect from 8th December 1957. However, to avert complete closure, the Workers' Union and the management came to a settlement on 5th December 1957. The parties agreed to run one shift of the Spinning section to start with and run the second shirt as soon as possible. They also agreed to the closure of the Weaving Section as it was uneconomic to continue that section. Due to the closure of the Weaving Section, 250 workers were discharged.